8th December 1961]

கொடுக்கப்பட்டு வருகிறது. யாருக்குக் கொடுத்தால் சீக்கிரத்தில் வேலை முடியுமோ அவர்களுக்குத்தான் கொடுப்பது வழக்கம். பீஸ் வொர்க்காக கொடுத்தால் வேலை சீக்கிரமாக நடக்கும் என்பதற்காக அப்படி கொடுக்கப்பட்டிருக்கிறது. அதன்படிக்குத்தான் அங்கு ரோடுகள் போடுவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன.

*Cultural delegations*

* 2196 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

கலை சம்பந்தப்பட்ட குழுக்களை வெளிநாடுகளுக்கு அனுப்பும்போது மத்திய சர்க்கார் நமது சர்க்காரை கலந்து ஆலோசிப்பது உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : Not generally.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், ஜெனரலாக மத்திய சர்க்கார் நம்மை கேட்கவில்லை என்றாலும், இப்படி அனுப்பக் கூடிய நேரத்தில் நாமாகவே அவர்கள் நம்மைக் கலந்து கொண்டு அனுப்ப வேண்டும் என்கிற ஆலோசனையையாவது நம் சர்க்கார் மத்திய சர்க்காருக்கு அனுப்ப வேண்டும் என்கிற யோசனையை யாவது நாம் அவர்களுக்குத் தெரிவிக்கக் கூடாதா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கொடுத்திருக்கிறோம். இப்பொழுது நம்மைக் கலந்துகொண்டு அவர்கள் ஆலோசிக்கிறார்கள்.

SRI K. VINAYAKAM : Sir, whereas it has been found that in the cultural delegations that are sent abroad, the Dravidian Culture is not properly represented and that the State Government are not consulted previously, would the Government insist that some artistes or persons who are authorities on the Dravidian Culture are also included so that their vision would be broadened and their shortsightedness would be decreased in future?

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, we should make out a list firstly of persons who, according to the hon. Member, Sri K. Vinayakam, are experts in the Dravidian Culture and secondly persons who are shortsighted and thirdly, persons who will get cured of this shortsightedness through these trips abroad and on that basis we shall try to make a recommendation.

*Jail Wardens (houses)*

* 2197 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

போலீசாருக்கு நல்ல வசதியான வீடுகளாக கட்டிக் கொடுப்பதுபோல ஜெயில் வார்டர்களுக்கும் கட்டிக்கொடுக்க உத்தேசம் உண்டா ?